# நீரிழிவு சமையல் புத்தகம்

## நீரிழிவால் பாதிக்கப்பட்டவர்களுக்கான ஆரோக்கியமான சைவ உணவு வகைகளின் கூட்டுக்கலவைகள்



சத்துணவு மற்றும் உணவியல் துறை




Dr. மோகன்'ஸ்
நீரிழிவு சிறப்பு மையம்
WHO Collaborating Centre for Non-communicable Diseases Prevention & Control

6B, கான்ரான் ஸ்மித் சாலை,
கோபாலபுரம், சென்னை–600 086.
தொலைபேசி : (91–44) 43968888, 28359048, 28359051
பேக்ஸ் : (91–44) 28350935

“டைரக்ட்” - அறக்கட்டளையின் பண உதவியுடன் இந்நூல் வெளியிடப்படுகிறது. இந்நூலில் மூலம் பெறும் தொகை அனைத்தும் ஏழை எளியவர்கள் மற்றும் நீரிழிவால் பாதிக்கப்பட்டவர்களின் தேவைகளுக்காக பயன்படுத்தப்படும்

# மதிப்புரை



**டாக்டர். வி. மோகன்**
M.D., FRCP (Lond, Edin, Glasg)., Ph.D., D.Sc., FNASc
தலைவர்



**டாக்டர். ரெமா மோகன்**
M.B.B.S., D.O., Ph.D., FABMS
மேலாண்மை இயக்குநர்

'நீரிழிவு சமையல் புத்தகம்' – நீரிழிவால் பாதிக்கப்பட்டவர்களுக்கான ஆரோக்கியமான சைவ உணவு வகைகளைக் கொண்ட இந்நூலிற்கு மதிப்புரை வழங்குவதில் பேருவகைக் கொள்கிறோம்.

உணவுக் கட்டுப்பாடு, நீரிழிவு நோய் சிகிச்சையில் பெரும்பங்கு வகிக்கிறது. ஆனால் அதற்கு நேர்மாறாக, உணவுக்கட்டுப்பாடு பற்றி பல தவறான கருத்துக்களும் நிலவி வருகின்றன. மேலும் இந்நோய் ஆயுள் முழுவதும் தொடரக்கூடியதாகையால், இந்நோயால் பாதிக்கப்பட்டவர்கள், தங்களது உணவு முறை மிகவும் சலிப்பினை அளிப்பதாக கருதுகின்றனர்.



இம்மையத்தின் உணவியல் நிபுணர்கள் இணைந்து, பல வகையான நீரிழிவு நோய்க்கான உணவு வகைகளைப் பற்றிய குறிப்புகளை, இந்நூலில் அளித்துள்ளார்கள். ஒவ்வொரு வகையினையும், பொருளையும் பரிசோதித்து, ஆராய்ந்து அதன் சத்து மதிப்பீடு அளித்துள்ளார்கள். கூடுமானவரையில் சைவ உணவு வகைகளை தருவதில் தான் நாங்கள் முயற்சித்து உள்ளோம். ஏனெனில், அசைவ உணவு சாப்பிடுபவர்கள் கூட, வாரத்தில் சில நாட்களில் மட்டுமே அசைவம் எடுத்துக் கொள்கின்றனர்.

பலரின் நீண்ட நாள் கோரிக்கைக்கேற்ப எழுதப்பட்ட இந்த புத்தகம், அவர்களின் தேவையை பூர்த்தி செய்யும் என்று நம்புகிறோம்.

இப்புத்தகத்தை வடிவமைத்த **திருமதி டாக்டர். சரோஜா ராகவன்** (தலைவர், சத்துணவு மற்றும் உணவியல் துறை, கல்வி மேலாளர், டாக்டர் மோகன் நீரிழிவு சிறப்பு மையம்) மற்றும், அவர் தலைமையில் பணிபுரியும், ஆர்வமிக்க மற்ற உணவியல் நிபுணர் குழுவுக்கும், நாங்கள் எங்கள் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூலினை மேலும் சிறந்த முறையில் வெளியிட உணவியல் நிபுணர்கள், சத்துணவு நிபுணர்கள் நீரிழிவு நோயாளிகள் மற்றும் பொது மக்களிடம் இருந்து, கருத்துக்களை வரவேற்கிறோம். இப்புத்தகத்தில் தவறுகள் ஏதேனும் இருப்பின், அவற்றை மன்னித்து, எங்களுக்கும் தெரியப்படுத்தினால், எதிர்காலத்தில் அவைகளை களைந்து, சிறந்த வகையில் வெளியிட வழிவகுக்கும்.

!!! பல்லாண்டுகள் வாழ வாழ்த்துகிறோம் !!!







# முகவுரை

எந்த வகையான நீரிழிவு நோயானாலும் சரியான உணவு உட்கொள்ளும் முறையே நோயைக் கட்டுப் பாட்டுக்கு கொண்டுவருவதில் பெரும் பங்கு வகிக்கிறது. சத்துள்ள உணவை உண்பது என்பது மூன்று அடிப்படை நோக்கங்களை கொண்டது சமமான, சீரான பலவகையான உணவுகளை உண்பதே அவை. நீரிழிவு நோய் உள்ளவர்களால் உண்ணும் உணவிலுள்ள எரிபொருள்களை (மாவுச் சத்து, புரதச்சத்து மற்றும் கொழுப்புச் சத்து) தேக்க வைத்துக்கொள்ள முடிவதில்லை. எனவே நீரிழிவு நோய் உள்ளவர்களுக்கு உடல் இயக்கத்திற்கும், இன்சுலின் அளவிற்கும் (ஊசி மூலம் செலுத்தப்படுவது அல்லது உடலில் உற்பத்தி ஆவது) ஏற்றாற் போல், உணவு முறையை சமச்சீராக உருவாக்கலாம்.

நீரிழிவு நோய் உள்ளவர்களின் தேவைக்கேற்ப, எளிதான உணவுமுறைகள் இப்புத்தகத்தில் உள்ளன. சர்க்கரை, இனிப்பு நீங்கலாக தயாரிக்கப்படும். நீரிழிவு நோய்க்கான உணவுமுறைகள், சமச்சீரானதாக உள்ளதால், இந்நோய் உள்ளவர்களுக்கு மட்டுமல்லமால், அவர்கள் குடும்பத்தினருக்கும் நன்மை பயப்பதாக உள்ளது. செயற்கை இனிப்பைக் கொண்டு நாம் இனிப்பு வகைளையும் தயார் செய்யலாம்.

இன்சுலின் உபயோகிப்பவராக இருந்தாலும் சரி, மாத்திரைகளைச் சாப்பிடுபவராக இருந்தாலும் சரி அவர்கள் சரியான அளவுச் சாப்பாடும் அதைத்தவிர சரியான நேரத்தில் உண்ணுதல், குறைந்த அளவு உணவை அடிக்கடி உண்ணுதல் போன்ற வழிமுறைகளைக் கையாளுதல் மிகவும் முக்கியமானதாகும், என்று உணவியல் வல்லுநர்கள் கூறுகின்றனர்.







சென்னை கோபாலபுரத்தில் இருக்கும் டாக்டர் மோகன் நீரிழிவு நோய் சிறப்பு மையமானது சிறந்த உணவியல் வல்லுநர்களின் மூலமாக பல்வேறு வகையான உணவு செய்முறைகளை இந்த சிறிய புத்தகத்தில் அச்சிட்டு வெளியிட்டுள்ளது. மேலும் சுவைத்துப் பார்த்தும் அங்கீகாரம் அளித்துள்ளார்கள்.

ஒவ்வொரு வகையான உணவுகளும், அவற்றின் சத்தளவும், அந்த உணவு பட்டியலுடன் கொடுத்துள்ளார்கள். இதில் நீரிழிவு நோய்க்குத் தகுந்தாற்போல் ஓர் நாளிற்குத் தேவையான உணவின் அளவு மற்றும் அநேக விதமான காலை உணவு வகைகள், மதிய உணவுடன் சாப்பிடும் கறிகாய் போன்ற பக்க உணவு, தேநீர் நேரத்தில் உண்ணக் கூடிய சுவையான சில பலகாரங்கள், செயற்கை சர்க்கரையிலிருந்து செய்யப்பட்ட இனிப்பு வகைகள் உள்ளன.

மற்றும் இப்புதக்கத்தில் பொதுவாக சாப்பிடும் உணவு வகைகளின் கலோரிச்சத்தும், அடிப்படை சமையல் முறையும், உணவு தயாரிப்பு முறையில் குறிப்பிட்ட சொற்களும் மற்றும் உணவு பொருட்களின் அகராதியும் அடங்கியுள்ளது.

இந்த புத்தக வெளியீடு எங்கள் மையத்தின் கோட்பாடுகளுடன் நீரிழிவு நோயினைக் குறைக்கும் முயற்சியில் வெற்றி காண ஒரு இன்றியமையாத சாதனமாகவும், குறைந்த அளவு கலோரிசத்து, குறைந்த அளவு கொழுப்புச் சத்து அதிக அளவு நார்சத்துப் பொருட்களைப்பற்றி நன்கு அறிந்த பொது மக்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது என நம்புகிறோம்.





**டாக்டர். மோகன் நீரிழிவு** சிறப்பு மையத்தின் திறமைமிக்க உணவியல் நிபுணர்களின் பெயர் பட்டியல்கள் கீழே குறிப்பிடப் பட்டுள்ளது. இந்நூல் புனைவதில் அவர்கள் தங்களை முழுமையாக ஐக்கியப் படுத்திக்கொண்டவர்கள்

**திருமதி. டாக்டர். சரோஜா ராகவன்**
தலைவர், சத்துணவு மற்றும் உணவியல் துறை,
கல்வி மேலாளர்

மற்றும் அவரின் தலைமையின் கீழ் தங்களை இப்பணியில் அர்ப்பணித்து செயலாற்றும் உணவியல் நிபுணர்கள் குழு

**திருமதி. S. பூங்கோதை**

**திருமதி. C. S. சாந்தி ராணி**

**திருமதி. R. ரேகா**

**செல்வி. K. கார்குழலி**

**திருமதி. KGT. தங்கமணி**

**திருமதி. N. ஹீரா நந்தினி**

**செல்வி. R. ரம்யா**

**செல்வி. P. S. ஷோபா**

**திருமதி. R. அஞ்சனா தேவி**

**திருமதி. S. விஜயலஷ்மி**

**திருமதி. D. சித்ரூபி திரிவேடி**

**திருமதி. R. அம்மு**

**திருமதி. V. கிரிஜா**

**செல்வி S. S. ஜெயஸ்ரீ**

**செல்வி. A. ராதிகா**

**செல்வி. K. R. சித்ரா**

# பொருளடக்கம்

# சிறப்பு உணவிற்கான பொன் மொழிகள்

1. ஐஸ்கிரீம், குளிர்ந்த பானங்கள், சர்க்கரையில் தயாரிக்கப்பட்ட பொருள்கள் அனைத்தையும் தவிர்க்கவும்.
2. விருந்து மற்றும் விரதம் தவிர்க்கவும்.
3. பச்சைக் காய்கறிகளை ஒவ்வொரு உணவின் துவகத்திற்கு முன் சாப்பிட முனையுங்கள்.
4. முளைகட்டிய உணவு வகைகளைச் சேர்க்கவும்.
5. உணவின் போது வறுக்கப்பட்ட உணவுகளை தவிர்க்கவும்.
6. எந்த வேளை உணவையும், உண்ணாமல் தவிர்க்கக் கூடாது.
7. மதுபான வகைகள் குறைக்கவும், தவிரிக்கவும் முனையுங்கள்.
8. நார் சத்துள்ள உணவுகளை அதிகமாக சேர்க்க முற்படுங்கள்.
9. உப்பினை குறைக்கவும்.
10. வறுத்தலை விட, ஆவியில் வேகவைத்தல் சிறந்தது.

# உளுந்து தோசை

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| உளுந்து | – | 100 கி. |
| பச்சைமிளகாய் | – | 3 |
| எண்ணெய் | – | 3 தே. க |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

உளுந்தை 4 நேரம் ஊறவைக்கவும். பின்பு அதை பச்சை மிளகாய் உப்புடன் அரைத்துக் கொள்ளவும். தோசை கல்லை சூடு படுத்தி எண்ணெய் தடவி, தோசை ஊற்றவும். இதை சூடாக வெங்காயம் அல்லது தக்காளி சட்னியுடன் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 469 கி. கலோரி |
| மாவு சத்து | : | 56.6 கி. |
| புரதம் | : | 24.0 கி. |
| கொழுப்பு | : | 16.3 கி. |
| நார் சத்து | : | 4.1 கி. |
| பகுதி அளவு | : | 6 |

## கலோரின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 தோசை | : | 78 கி. கலோரி |
| தோசையின் விட்டம் | : | 5½ அங்குலம் |

# கேழ்வரகு இட்லி

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| கேழ்வரகு | – | 60 கி. |
| உளுந்தம் பருப்பு | – | 30 கி. |
| வெந்தயம் | – | 2 தே. க |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

கேழ்வரகை நன்றாக கழுவி களைந்து, கல்நீக்கி, ஓர் இரவு முழுவதும் ஊற வைக்கவும், பருப்பையும், வெந்தயத்தையும் ஊற வைக்கவும். 8–10 மணி நேரத்திற்குப் பிறகு இரண்டும் தனித்தனியாக அரைத்துக் கலக்கவும். உப்பு சேர்த்து பிறகு 5–6 மணி நேரம் புளிக்க வைக்கவும். இட்லி குக்கரில் ஆவியில் வேகவைக்கவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 346 கி. கலோரி |
| மாவு சத்து | : | 66.6 கி. |
| புரதம் | : | 14.9 கி. |
| கொழுப்பு | : | 1.9 கி. |
| நார் சத்து | : | 3.3 கி. |
| பகுதி அளவு | : | 4 பகுதி |

## கலோரின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 இட்லி | : | 87 கி.கலோரி |

# வெஜிடபிள் அவல் உப்புமா

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அவல் | – | 100 கி. | இஞ்சி | – | ½ அங்குலம் |
| பீன்ஸ் | – | 100 கி. | கடுகு | – | ¼ தே. க |
| பட்டாணி | – | 50 கி. | உளுத்தம் பருப்பு | – | 1 தே. க |
| வெங்காயம் | – | 50 கி. | சீரகம் | – | 1 தே. க |
| பச்சை மிளகாய் | – | 4 | எண்ணெய் | – | 2 தே. க |
| பூண்டு | – | 2 பல் | உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

அவலை தண்ணீரில் ஊறவைக்கவும். காய்கறிகளை பொடியாக நறுக்கிக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் ஊற்றி , காய்ந்ததும் கடுகு, உளுந்தம் பருப்பு, சீரகம் போட்டுத் தாளிக்கவும். இத்துடன் துருவிய இஞ்சி, பூண்டை சேர்த்து வாசனை போகும் வரை வதக்கவும். நறுக்கிய வெங்காயம், பீன்ஸ், பட்டானி ஆகியவற்றை சேர்த்து கிளறவும். தேவையான அளவு உப்பு சேர்க்கவும். காய்கறிகள் நன்கு வெந்தவுடன் ஊறவைத்த அவலை சேர்த்து நன்கு கிளறி, சிறிது நேரம் சிறியத் தீயில் வைத்து இறக்கவும், நறுக்கிய கொத்தமல்லித் தழைகளைத் தூவி சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 818 கி. கலோரி |
| மாவு சத்து | : | 141.8 கி. |
| புரதம் | : | 24.6 கி. |
| கொழுப்பு | : | 14.1 கி. |
| நார் சத்து | : | 6. 3 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரின் மதிப்பீடு :

1 பகுதி அவல் உப்புமா : 409 கி. கலோரி

# பட்டானி ஊத்தப்பம்

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| அரிசி | – | 100 கி. |
| உளுத்தம் பருப்பு | – | 50 கி. |
| பச்சைமிளகாய் | – | 2 (பொடியாக நறுக்கியது) |
| வெங்காயம் | – | 1 (45கி) (பொடியாக நறுக்கியது) |
| கொத்தமல்லித் தழை | – | 10 கி. |
| வேகவைத்த பட்டானி | – | 50 கி. |
| எண்ணெய் | – | 10 கி. |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

அரிசியையும், உளுத்தம் பருப்பையும் தனித்தனியாக 6 மணி நேரம் ஊறவைத்து, தண்ணீரை வடித்து, தேவையான அளவு உப்பு சேர்த்து வழுவழுப்பாக அரைத்துக் கொள்ளவும். அரைத்த இரண்டு மாவையும் நன்கு கலக்கி (இரவு முழுவதும்) புளிக்க விடவும். புளித்த மாவில் நறுக்கிய வெங்காயம் பச்சை மிளகாய் சேர்த்து, அத்துடன் வேகவைத்த பட்டானியை மசித்து சேர்த்து நன்கு கலக்கவும். தோசைக் கல்லைக் காயவைத்து மாவை சற்று கனமாக தோசை ஊற்றுவது போல ஊற்றி, சுற்றிலும் எண்ணெய் ஊற்றவும், சிறது நேரம் கழித்து, திருப்பிப் போட்டு சிவந்ததும், சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 702 கி. கலோரி |
| மாவு சத்து | : | 120 கி. |
| புரதம் | : | 26.2 கி. |
| கொழுப்பு | : | 21.2 கி. |
| நார் சத்து | : | 8.4 கி. |
| பகுதி அளவு | : | 4 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 ஊத்தப்பம் | : | 176 கி. கலோரி |

# பச்சை பயறு தோசை

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| முழு பச்சை பயறு | – | 50 கி. |
| பச்சை மிளகாய் | – | 2 |
| இஞ்சி | – | ஒரு துண்டு |
| வெங்காயம் | – | 50 கி. |
| எண்ணெய் | – | 15 கி. |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

பச்சை பயரை 2–3 மணி நேரத்திற்கு ஊறவைக்கவும், பிறகு இஞ்சி, பச்சை மிளகாய், உப்பு எல்லாவற்றையும் சேர்த்து அரைக்கவும். வெங்காயத்தை சிறு துண்டுகளாக நறுக்கி அறைத்த மாவுடன் கலக்கவும். தோசைக் கல்லில் சிறு துளி எண்ணெய்த் தடவி சூடானதும் ஒரு கரண்டி மாவை தோசையாக ஊற்றவும். மறுபுறம் திருப்பி வேகவைக்கவும். தக்காளி சட்னியுடன் சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 317 கி. கலோரி |
| மாவு சத்து | : | 34 கி. |
| புரதம் | : | 12.6 கி. |
| கொழுப்பு | : | 15.7 கி. |
| நார் சத்து | : | 2.4 கி. |
| பகுதி அளவு | : | 3 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 தோசை | : | 109 கி. கலோரி |
| தோசையின் அளவு | : | 5½ அங்குலம் |

# முள்ளங்கி சூப்

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| முள்ளங்கி (வெள்ளை) | : | 100 கி. |
| மசாலா தூள் | : | ¼ தே. க |
| உப்பு | : | ¼ தே. க |
| பொறித்த பிரெட் துண்டு | : | 4–5 |

## செய்முறை :

முள்ளங்கியை கழுவி, தோல் நீக்கி, துருவி நன்கு வேகவைக்கவும், பின்பு மசித்து அதை வடிகட்டவும். வடிகட்டிய சூப் உடன் மசாலா தூள், உப்பு சேர்த்துக் கொள்ளவும். பிறகு கொதிக்க வைக்கவும். பிரெட் துண்டு வைத்து அழகு செய்யவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 50 கி. கலோரி |
| மாவு சத்து | : | 8.3 கி. |
| புரதம் | : | 1.6 கி. |
| கொழுப்பு | : | 1.2 கி. |
| நார் சத்து | : | 0.9 கி. |
| பகுதி அளவு | : | 1 பகுதி |



# சத்து சூப்

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பிரெட் துண்டு | – | 1 | தக்காளி | – | 2 |
| பச்சை பயிறு (முளைகட்டியது) | – | 10 கி. | பூண்டு | – | 2–3 |
| | | | இஞ்சி | – | 1 துண்டு |
| கடலை பருப்பு | – | 10 கி. | மிளகு தூள் | – | ¼ தே. க |
| கொள்ளு | – | 10 கி. | உப்பு | – | ¼ தே. க |
| சோயாபீன் | – | 10 கி. | வறுத்த கறிவேப்பிலை | – | 1 தே. க |
| ராஜ்மா (சிவப்பு பீன்ஸ்) | – | 10 கி. | | | |

## செய்முறை :

முளைகட்டிய பயறுகளை மற்றும் தக்காளியை நன்கு வேகவைக்கவும். தக்காளியின் தோலை உரிக்கவும். பிரெட் துண்டு, வேகவைத்த பயறுகள், தக்காளி, இஞ்சி, மிளகு, பூண்டு, உப்பு இவற்றை சேர்த்து மசிக்கவும். இத்துடன் தண்ணீர் சேர்த்து நன்கு மசிக்கவும், இந்த கலவையை வடிகட்டவும், வடிகட்டிய சூப்பை கொதிக்க வைக்கவும். கறிவேப்பிலையை வைத்து அலங்கரிக்கவும், பிறகு பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 241 கி. கலோரி |
| மாவு சத்து | : | 27.4 கி |
| புரதம் | : | 15.6 கி. |
| கொழுப்பு | : | 3.2 கி. |
| நார் சத்து | : | 2.2 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி : 120 கி.கலோரி





# புதினா வெள்ளரிக்காய் லசி

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| ஆடை நீக்கிய தயிர் | – | 150 மி. லி. |
| புதினா இலை | – | 1 தே. க |
| வெள்ளரிக்காய் | – | 2 |
| பச்சைமிளகாய் | – | 1 |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

நறுக்கிய வெள்ளரிக்காய், புதினா, தயிர், பச்சை மிளகாய் இவற்றை சேர்த்து மசித்து (மிக்சியில்) அரைத்து அதை காலை அல்லது மாலை நேர சிற்றுண்டியில் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 57 கி. கலோரி |
| மாவு சத்து | : | 9.4 கி. |
| புரதம் | : | 9.4 கி. |
| கொழுப்பு | : | 0.2 கி. |
| நார்சத்து | : | 0.4 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 கப் : 29 கி. கலோரி

# ரொட்டியும் கொள்ளு பக்வான்

## தேவையான பொருட்கள்

| | |
|---|---|
| கோதுமை மாவு | – 50 கி. |
| உப்பு | – தேவையான அளவு |
| தண்ணீர் (மாவு கலக்குவதற்கு) | – 1 தே. க |
| எண்ணெய் | – தடவுவதற்கு |

## செய்முறை :

கோதுமை மாவுடன் தண்ணீர் சேர்த்து மிருதுவான உருண்டையாக பிசையவும் இக்கலவையை சிறிய உருண்டைகளாக பிரித்துக் கொள்ளவும். இரண்டு சிறிய உருண்டைகளை எடுத்துக் கொண்டு தனித்தனியாக சப்பாத்தியாக உருட்டவும். அதன் மேல் சொட்டு எண்ணெய் தடவி இரண்டும் சேர்த்துச் சிறிதளவு மாவுடன் மெல்லிய சப்பாத்தியாக உருட்டவும். சூடான கல்லில் போட்டு இரண்டு பக்கமும் வேகவைக்கவும். சில நிமிடத்திற்கு பிறகு தனியாக பிரித்தெடுக்கவும்.

### முளைக்கட்டிய உணவு வகைகளின் பயன்கள்

- **மிகவும் எளிதாக ஜீரணிக்கக்கூடிய நல்ல ஊட்டச்சத்தான உணவு.**
- **அதிக அளவு நொதிகளை (என்சைம்) தருவிக்கின்றது.**
- **இளைப்பதற்கும் உடல் மெலிவதற்கும் உதவுகிறது.**
- **புரதச்சத்தை அதிகரிக்கச் செய்கிறது.**
- **வாயு பிரச்சனைகளைக் குறைக்கின்றது.**
- **கனிம சத்துக்களை உற்பத்தி செய்யவும். அவற்றை உறிஞ்சவும் உதவுகிறது.**
- **நரம்பு, மூளை இவைகள் நன்றாக செயல் படுவதற்கு உதவுகிறது.**

# கொள்ளு பக்வான்

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| கொள்ளு | – | 50 கி. |
| முட்டைகோஸ் | – | 10 கி. |
| பீன்ஸ் | – | 10 கி. |
| பட்டானி | – | 10 கி. |
| பச்சை மிளகாய் | – | 5 கி. |

## செய்முறை :

நறுக்கிய காய்கறிகளுடன் (முட்டைகோஸ், பட்டானி, காளிஃப்ளவர், பீன்ஸ்) ஊறவைத்த கொள்ளும் சேர்த்துப் ப்ரஷர் குக்கரில் வேகவைக்கவும். புளி கரைத்துவிட்டு 10 நிமிடத்திற்கு பச்சைமனம் போகும் வரைக்கும் கொதிக்கவிடவும். இத்துடன் வேகவைத்த கொள்ளும் மற்ற பொருட்களும் சேர்த்துச் சில நிமிடத்திற்கு வேக வைக்கவும். கடுகு, பச்சைமிளகாய் இஞ்சி மற்றும் எண்ணெய்தாளித்து பிறகு கொத்தமல்லியுடன் அலங்கரித்துச் சூடாக பரிமாற்றவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 413 கி. கலோரி |
| மாவு சத்து | : | 70.7 கி. |
| புரதம் | : | 18.5 கி. |
| கொழுப்பு | : | 6.3 கி. |
| நார் சத்து | : | 4.6 கி. |
| பகுதி அளவு | : | 1 பகுதி |

# காளான் புலாவ்

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பட்டன் காளான் | – | 100 கி. | பூண்டு | – | 3 பல் |
| பாசுமதி அரிசி | – | 50 கி. | கொத்தமல்லி | – | 50 கி. |
| தக்காளி | – | 1 | மசாலபொடி | – | ½ தே. க |
| வெங்காயம் | – | 1 | மிளகு மற்றும் | | |
| பச்சை மிளகாய் | – | 2 | சீரகப் பொடி | – | ½ தே. க |
| இஞ்சி | – | 1 துண்டு | எண்ணெய் | – | 2 தே. க |

## செய்முறை :

காளானில் அரை உப்பு சேர்த்து வேகவைக்கவும். அரிசியை கழுவி பின்பு ஒரு மணிநேரம் ஊறவைத்து மீதி உள்ள அரை உப்பு சேர்த்து வேகவைக்கவும். தக்காளி, வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி, பூண்டு மற்றும் கொத்தமல்லி இவற்றை அரைத்து எண்ணெயில் வதக்கவும். இத்துடன் காளான், மசாலா பொடி, மிளகு மற்றும் சீரகப் பொடி இவற்றை வேகவைத்த அரிசியுடன் சேர்க்கவும். நன்கு கலந்து பிறகு வேகவைக்கவும். சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 362 கி. கலோரி |
| மாவு சத்து | : | 53.9 கி. |
| புரதம் | : | 9.2 கி. |
| கொழுப்பு | : | 11.5 கி. |
| நார் சத்து | : | 1. 8 கி. |
| பகுதி அளவு | : | 1 பகுதி |

# ஸ்டஃப்டு குடைமிளகாய்

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| குடை மிளகாய் | – | 1 (50 கி.) |
| பருப்பு உசிலி | – | 2 மே. க |
| உப்பு | – | ¼ தே. க |

## செய்முறை :

குடைமிளகாயின் மேல் பக்கத்தில் ஒரு மூடி மாதிரி மெல்லியதாக சீவி எடுக்கவும், விதைகள் நீக்கிவிட்டு உள்பக்கத்தில் உப்பு தடவும், குடைமிளகாய்க்குள் பருப்பு உசிலி வைத்து நிரப்பவும். பிறகு இட்லி குக்கரில் 10 நிமிடத்திற்கு வேக வைக்கவும். மதியம் அல்லது இரவு உணவுக்கு பக்க உணவாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 64 கி. கலோரி |
| மாவு சத்து | : | 9.6 கி. |
| புரதம் | : | 3.6 கி. |
| கொழுப்பு | : | 1.1 கி. |
| நார் சத்து | : | 6.9 கி. |
| பகுதி அளவு | : | 1 பகுதி |

# புடலங்காய் கோஃப்தா கறி

## தேவையான பொருட்கள்

| | | | |
|---|---|---|---|
| புடலங்காய் | – 150 கி. | மஞ்சள் தூள் | – ½ தே. க |
| கடலைமாவு | – 25 கி. | மிளகாய் பொடி | – 1 தே. க |
| வெங்காயம் | – 50 கி. | கரம் மசாலா | – ½ தே. க |
| இஞ்சி, பூண்டு, விழுது | – 1 தே. க | பொறிப்பதற்கு | |
| தக்காளி | – 50 கி. | எண்ணெய் | – 4 தே. க |
| பட்டை | – 1 | ஆடை நீக்கப்பட்ட தயிர் | – 1 தே. க |
| இலவங்கம் | – 1 | உப்பு | – தேவையான அளவு |

## செய்முறை :

***கோஃப்தாவிற்கு***

புடலங்காயை துருவி தண்ணீர் வீனாக்காமல் பிழிந்து எடுக்கவும். இத்துடன் மஞ்சள் பொடி, மிளகாய்ப் பொடி, கரம் மசலாப் பொடி, கடலை மாவு மற்றும் உப்பு சேர்த்து நன்றாக கலந்து சப்பாத்தி மாவுப் போல் பிசைந்து வைக்கவும். இக்கலவையை ஒரு எலுமிச்சம் பழம் அளவுக்கு உருண்டைகளை பிரித்து உருட்டி சிறு தீயில் வறுக்கவும்.

***கிரேவிக்கு :***

அதனுடன் நறுக்கிய வெங்காயத்தை பொன்நிறமாக வறுத்து, நறுக்கிய தக்காளி, புடலங்காயிலிருந்து நீக்கிய தண்ணீர், இஞ்சி, பூண்டு, வெங்காய கிரேவி எல்லாவற்றையும் சேர்த்து பச்சை மனம் நீக்கும்வரை வதக்க விடவும். கோஃப்தாகளை இத்துடன் சேர்த்து சிறு தீயில் 2 நிமிடத்திற்கு கொதிக்கவிடவும். ஒரு டீஸ்பூன் தயிர் இத்துடன் மேலாக சேர்த்து சூடான சப்பாத்தியுடன் (அல்லது) சாதத்துடன் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 300 கி. கலோரி |
| மாவு சத்து | : | 27.5 கி. |
| புரதம் | : | 7.1 கி. |
| கொழுப்பு | : | 41.7 கி. |
| நார் சத்து | : | 2.2 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி : 150 கி. கலோரி

# முளைகட்டிய கொள்ளு வெந்தயகீரை, வெங்காயத்தாள் மசாலா

## தேவையான பொருட்கள்

| | | | |
|---|---|---|---|
| வெந்தயக்கீரை | – 25 கி. | பூண்டு | – 3 பல் |
| வெங்காயம் | – 25 கி. | சீரகம் | – ¼ தே. க |
| கொள்ளு | – 25 கி. | மல்லி | – ½ தே. க |
| பச்சை மிளகாய் | – 2 | கறிவேப்பிலை | – ¼ தே. க |
| எண்ணெய் | – ½ தே. க | கொத்தமல்லி, | – ¼ தே. க |
| இஞ்சி | – சிறிய துண்டு | எலுமிச்சை பழம் சாறு | – ¼ தே. க |
| | | உப்பு | – தேவையான அளவு |

## செய்முறை :

வெந்தயக்கீரை, வெங்காயத்தை நறுக்கி, உப்பு கலந்து தனியாக வைக்கவும். கொள்ளை ஓர் இரவு முழுவதும் தண்ணீரில் ஊறவைத்து, பின் அதை ஓர் ஈரத்துணியில் கட்டி வைத்து, முளைவிடச் செய்யவும். மல்லியையும், சீரகத்தையும் வெறும் வாணலியில் வறுத்த, அதனுடன் இஞ்சி, பூண்டு, பச்சைமிளகாய், கொத்தமல்லி தழை ஆகியவற்றைச் சேர்த்து விழுதாக அரைத்து எடுத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு சேர்த்து, நறுக்கிய வெங்காயம், கறிவேப்பிலையை பொன்னிறமாக வறுக்கவும். அதனுடன் அரைத்த விழுதையும் சேர்க்கவும். நறுக்கிய வெந்தக்கீரை, வெங்காயத்திலிருந்து அதிக நீரை வடித்துவிட்டு, அதனுடன் கொள்ளையும் சேர்த்து, சிறிதளவு உப்பு சேர்த்து, அதனை சிறிது நேரம் வேகவைக்கவும். அதனுடன் எலுமிச்சை சாறு சிறிது கலந்து, எல்லாவற்றையும் கலக்கவும். அடுப்பில் இருந்து இறக்கி சூடாகப் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | | |
|---|---|---|---|
| எரிபொருள் | : 125. கி. கலோரி | நார்சத்து | : 2.0 கி. |
| மாவு சத்து | : 18.1 கி. | பகுதி அளவு | : 1 பகுதி |
| புரதம் | : 6.8 கி. | | |
| கொழுப்பு | : 2.9 கி. | | |

# பருப்பு உசிலி

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| து. பருப்பு | – | 100 கி. |
| (அ) ப. பருப்பு | – | 100 கி. |
| சிவப்பு மிளகாய் | – | 8 |
| பெருங்காயம் | – | ¼ தே. க |
| மஞ்சள் தூள் | – | ¼ தே. க |

## தாளிப்பதற்கு

| | | |
|---|---|---|
| உ. பருப்பு | – | 1 தே. க |
| கடுகு | – | ¼ தே. க |
| கறிவேப்பிலை | – | சிறிதளவு |
| நல்லெண்ணெய் | – | 1 தே. க |

## செய்முறை :

பருப்பை 30 நிமிடத்திற்கு சுடு தண்ணீரில் ஊறவைக்க வேண்டும். வடிகட்டிய தண்ணீரை பருப்பு மிளகாய், பெருங்காயம் இத்துடன் உப்பு சேர்த்து நரநநரவென்று அரைக்கவும். அரைத்த விழுதை ஆவியில் வேகவைக்கவும். சூடு தனிந்ததும், ரொட்டி தூள் பதத்திற்கு உதிர்க்கவும். வாணலியில் எண்ணெய்யை சூடாக்கவும். கடுகு, உ. பருப்பு, கறிவேப்பிலை சேர்த்து தாளிக்கவும். உதிர்ந்த பருப்பை சேர்த்து ஒரு நிமிடம் வறுக்கவும். எந்த விதமான காய்கறி உசிலிக்கும் இதையே அடிப்படையாக உபயோகிக்கலாம்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 412 கி. கலோரி |
| மாவு சத்து | : | 59.2 கி. |
| புரதம் | : | 23.1 கி. |
| கொழுப்பு | : | 7.0 கி. |
| நார் ச்துத | : | 3.0 கி. |
| பகுதி அளவு | : | 4 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 பகுதி | : | 103 கி. கலோரி |

# காய்கறி உசிலி

## தேவையான பொருட்கள்

காய்கறிகள் – 100 கி.
(கொத்தவரை, புடலங்காய், பிரென்ச் பீன்ஸ், அவரக்காய், முருங்கை இளை, நொச்சி இலை, வெந்தயக்கீரை, வாழைப்பூ)
பருப்பு உசிலி – 1 பகுதி

## செய்முறை :

காய்கறிகளை கழுவி நறுக்கவும். ஆவியில் வேகவைக்கவும். பருப்பு உசிலியுடன் கலந்து சூடான சாதத்துடன் பரிமாறவும்.



# லெட்டியஸ் தால்

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நொச்சி இலை (நடு தண்டு நீக்கி நறுக்கியது) | – | 100 கி. | மஞ்சள் தூள் | – | ¼ தே. க |
| | | | மிளகாய்த் தூள் | – | ¼ தே. க |
| முளைகட்டிய பச்சை பயறு | – | 100 கி. | கரம் மசாலா | – | ¼ தே. க |
| தக்காளி நறுக்கியது | – | 100 கி. | எண்ணெய் தாளிப்பதற்கு | – | 1 தே. க |

**விழுதாக அரைக்கவும் :** பச்சை மிளகாய் – 2, இஞ்சி – 1, வெங்காயம் –1, கொத்தமல்லி – சிறிதளவு தக்காளி – 50 கிராம்.

## செய்முறை :

எண்ணெய்யை சூடாக்கவும். அரைத்த விழுதை சேர்த்து ஒரு நிமிடம் வறுக்கவும். இத்துடன் மசாலா, மிளகாய்த் தூள், மஞ்சள் பொடி, தக்காளி, நறுக்கிய நொச்சி இலை எல்லாவற்றையும் சேர்க்கவும் முளைகட்டிய பயறும் சேர்த்து கெட்டியாகும் வரை வேகவைக்கவும். எலுமிச்சம் பழச்சாறு பிழிந்து சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 316 கி. கலோரி |
| மாவு சத்து | : | 45.5 கி. |
| புரதம் | : | 17.8 கி. |
| கொழுப்பு | : | 6.6 கி. |
| நார் சத்து | : | 4.1 கி. |
| பகுதி அளவு | : | 4 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி : 79 கி. கலோரி

# காளான் ராஜ்மா கறி

## தேவையான பொருட்கள் :

| | | | |
|---|---|---|---|
| பட்டன் காளான் | – 200 கி. (1 பாக்கெட்) | தனியா, சீரகப்பொடி | – 1 மே. க |
| ராஜ்மா (சிகப்பு பீன்ஸ்) | – 25 கி. | வெங்காயம் | – 1 |
| தக்காளி | – 200 கி. (2 பெரியது) | மிளகாய்த்தூள் | – 1 மே. க |
| புதினா இலை | – 1 மே. க | பச்சைமிளகாய் | – 2 |
| கொத்தமல்லி | – 1 மே. க | உப்பு | – தேவையான அளவு |

## செய்முறை :

காளானை பெரிய துண்டுகளாக நறுக்கவும். ராஜ்மாவை 8–10 மணி நேரத்திற்கு தண்ணீரில் ஊறவைக்கவும். காளான், தக்காளி, மஞ்சள் தூள் ஒரு குக்கர் தட்டிலும், ராஜ்மா ஒரு தட்டிலும் தனித்தனியாக பிரஷர் குக்கரில் வேகவைக்கவும். வெங்காயம், 1 மேஜைக்கரண்டி வேகவைத்த ராஜ்மா, பச்சை மிளகாய், கொத்தமல்லி, புதினா இலை, மிளகாய்த் தூள், கரம் மசாலா தூள் எல்லாவற்றையும் சேர்த்து அரைக்கவும். வாணலியில் 1 டீஸ்பூன் எண்ணெய் விட்டு சூடானதும் அரைத்த விழுதை வதக்கவும். தனியா, சீரகப் பொடி, ஆடை நீக்கிய தயிரும் சேர்த்து நன்றாக கலக்கவும். வேகவைத்த ராஜ்மா மற்றும் காளானையும் சேர்க்கவும். பரிமாறுவதற்கு கெட்டியாகும் வரை விழுதை கொதிக்கவிடவும், சப்பாத்தியுடன் சூடாகப் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 295 கி. கலோரி |
| மாவு சத்து | : | 33.5 கி. |
| புரதம் | : | 14.9 கி. |
| கொழுப்பு | : | 10.3 கி. |
| நார் சத்து | : | 3.0 கி. |
| பகுதி அளவு | : | 3 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி : 98 கி. கலோரி

# மாங்காய் தால்

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாங்காய் (புளிப்பு) துருவியது | – | 100 கி. | பச்சைமிளகாய் | – | 3 நறுக்கியது |
| துவரம் பருப்பு | – | 50 கி. | கறிவேப்பிலை | – | சிறிதளவு |
| கடலெண்ணெய் | – | 1 தே. க | மஞ்சள் பொடி | – | ¼ தே. க |
| உளுந்தம் பருப்பு | – | 1 தே. க | கடுகு | – | 1 தே. க |
| | | | பெருங்காயம் | – | சிறிதளவு |

## செய்முறை :

துவரம் பருப்பை சிறிதளவு மஞ்சள் தூள் சேர்த்து வேகவைத்து எடுத்துக் கொள்ளவும். மாங்காயை நன்றாக சீவிக்கொள்ள வேண்டும். வாணலியில் எண்ணெய் விட்டு, சூடாக்கி கடுகு, பெருங்காயம் சேர்க்கவும். கடுகு வெடித்தபின், உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை, பச்சை மிளகாய் சேர்த்து வறுத்து பின் அதனுடன் மாங்காயைச் சேர்க்கவும், மாங்காய் வேகத் தேவையான தண்ணீரையும் அதனுடன் சேர்த்து கொள்ளவும். பருப்பில் சிறிது தண்ணீர் ஊற்றி மசித்தபின், அதை மாங்காய் கலவையுடன் சேர்த்து, சிறிது நேரம் அடுப்பில் வைத்துவிட்டு எடுத்து விடலாம். இதை சப்பாத்தி, சாதம் ஆகியவற்றுடன் சேர்த்து சாப்பிடலாம்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 285 கி. கலோரி |
| மாவு சத்து | : | 43.0 கி. |
| புரதம் | : | 14.1 கி. |
| கொழுப்பு | : | 8.0 கி. |
| நார் சத்து | : | 2.1 கி. |
| பகுதி அளவு | : | 4 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி : 71 கி. கலோரி

# சப்ஜி சங்கம்

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| பீன்ஸ் | – | 25 கி. |
| பட்டானி | – | 25 கி. |
| தக்காளி | – | 25 கி. |
| காளிஃப்ளவர் | – | 25 கி. |
| வெங்காயம் | – | 45 கி. |
| கொத்தமல்லி | – | சிறிதளவு |
| மஞ்சள் பொடி | – | 1 தே. க |
| இஞ்சி | – | 10 கி. |
| பூண்டு | – | 10 கி. |
| பச்சைமிளகாய் | – | 5 கி. |
| முட்டை கோஸ் | – | 25 கி. |

## செய்முறை :

காய்கறிகளை கழுவி சிறிய துண்டுகளாக நறுக்கவும். இவற்றைத் தனியாக வேகவைக்கவும். வெங்காயம், தக்காளியையும் நறுக்கவும். மிளகாய்ப் பொடி, மஞ்சள் பொடி, இஞ்சி, பூண்டும் சேர்த்து அரைக்கவும். வாணலியில் எண்ணெய் சூடாக்கவும். வெங்காயம், இஞ்சி பூண்டுவிழுது, நறுக்கிய தக்காளியும் சேர்த்து வறுக்கவும். நறுக்கிய காய்கறிகளை சேர்க்கவும். 5 நிமிடத்திற்கு வறுக்கவும். பச்சை மிளகாய், கொத்தமல்லி, மசாலா பொருட்கள் எல்லாவற்றையும் சேர்க்கவும். காய்கறிகள் நன்றாக வெந்து விழுது கெட்டியாகும் வரைக்கும் கொதிக்கவிடவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 182 கி. கலோரி |
| மாவு சத்து | : | 15.1 கி. |
| புரதம் | : | 6.4 கி. |
| கொழுப்பு | : | 10.5 கி. |
| நார் சத்து | : | 5.3 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 பகுதி | : | 91 கி. கலோரி |

# தம்கி தால்

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| து. பருப்பு | – | 150 கி. |
| வெங்காயம் | – | 50 கி. |
| தக்காளி | – | 50 கி. |
| இஞ்சி, பூண்டு விழுது | – | துளி |
| கொத்தமல்லி | – | சிறிதளவு |
| பட்டை | – | 2 |
| இலவங்கம் | – | 1–2 |
| பச்சைமிளகாய் | – | 2 |
| மிளகாய்த்தூள் | – | ½ தே. க |
| எண்ணெய் | – | 5 கி. |

## செய்முறை :

பருப்பை ½மணி நேரத்திற்கு ஊறவைக்கவும், பிறகு பிரஷர் குக்கரில் 10 நிமிடத்திற்கு வேகவைத்துத் தனியாக வைக்கவும். வாணலியை அடுப்பில் வைத்து சூடானதும் 1 டீஸ்பூன் எண்ணெய் விடவும். இத்துடன் நறுக்கிய வெங்காயத்தை சேர்த்து பொன்னிறமாக வறுக்கவும். இத்துடன் நறுக்கிய தக்காளி, இஞ்சி, பூண்டு, மசாலா, பட்டை, இலவங்கம், பச்சை மிளகாய் ½ தேக்கரண்டி மிளகாய்த் தூள், கொத்தமல்லி எல்லாவற்றையும் வறுக்கவும். இத்துடன் வேகவைத்த பருப்பும், பருப்பு தண்ணீரும் சேர்க்கவும் சிறு தீயில் வைத்துக் கிளரவும். தேவையான உப்பும் நறுக்கிய கொத்தமல்லியும் சேர்க்கவும்.

***கவனிக்கவும் :*** வேகவைத்த பருப்பு நீர்க்க இருக்க கூடாது.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 194 கி. கலோரி |
| மாவு சத்து | : | 31.3 கி. |
| புரதம் | : | 11.5 கி. |
| கொழுப்பு | : | 2.5 கி. |
| நார் சத்து | : | 0.9 கி. |
| பகுதிஅளவு | : | 3 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி : 65 கி. கலோரி

# வெந்தய காளான் கறி

## தேவையான பொருட்கள் :

| | | | |
|---|---|---|---|
| பட்டன் காளான் (நறுக்கியது) | – 100 கி. | மஞ்சள் தூள் | – சிட்டிகை |
| | | மிளகாய் தூள் | – சிட்டிகை |
| வெந்தயக்கீரை (நறுக்கியது) | – 50 கி. | மசாலா | – ¼ தே. க |
| தக்காளி (நறுக்கியது) | – 50 கி. | உப்பு | – ¼ தே. க |
| வெங்காயம் (நறுக்கியது) | – 50 கி. | எண்ணெய் | – 10 கி. |
| பூண்டு துண்டு (பல்) | – 2–3 தட்டியது | | |

## செய்முறை :

எண்ணெய்யை சூடுபடுத்தி அதில் பச்சை மிளகாய், வெங்காயம் தட்டிய இஞ்சி, பூண்டு இவற்றை போட்டு வதக்கவும். இத்துடன் தக்காளி, மஞ்சள் தூள், மிளகாய் தூள், மசாலா தூள், உப்பு, வெந்தயக் கீரை மற்றும் காளான் போட்டு நன்றாக கிளறி, காளான் வேகும்வரை தட்டு போட்டு மூடிவைக்கவும். இதை சாதம் அல்லது சப்பாத்தியுடன் சூடாக நறுக்கிய கொத்தமல்லி இலைகளுடன் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 193 கி. கலோரி |
| மாவு சத்து | : | 14.7 கி. |
| புரதம் | : | 6.4 கி. |
| கொழுப்பு | : | 11.4 கி. |
| நார் சத்து | : | 1.7 கி. |
| பகுதி அளவு | : | 1 பகுதி |

# கரேளா தால்

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாகற்காய் | – | 250 கி. | பச்சை மிளகாய் | – | 2 |
| து. பருப்பு | – | 150 கி. | மிளகாய்ப் பொடி | – | ¾ தே. க |
| வெங்காயம் | – | 100 கி. | இஞ்சி, | | |
| தக்காளி | – | 50 கி. | பூண்டு விழுது | – | சிறுதுளி |
| மஞ்சள் பொடி | – | சிறுதுளி | கொத்தமல்லி | – | சிறிய கொத்து |

## செய்முறை :

பருப்பை கழுவி ½ மணிநேரம் ஊறவைக்கவும். பிரஷர் குக்கரில் 10 நிமிடத்திற்கு வேகவைக்கவும் வாணலியில் 2 தேக்கரண்டி எண்ணெய் விட்டு காய்ந்ததும் நறுக்கிய வெங்காயத்தை சேர்த்து பொன்னிறமாக வறுக்கவும். பாகற்காயும் மற்ற எல்லாபொருட்களும் சேர்க்கவும். ஒரு கப் தண்ணீர் விட்டு 10 நிமிடத்திற்கு வேகவைக்கவும். பாகற்காய் வெந்ததும் வேகவைத்த பருப்பை சேர்க்கவும். இத்துடன் தேவையான உப்பும், கொத்தமல்லியும் சேர்க்கவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 168 கி. கலோரி |
| மாவு சத்து | : | 27.5 கி. |
| புரதம் | : | 9.8 கி. |
| கொழுப்பு | : | 2.1 கி. |
| நார் சத்து | : | 1.3 கி. |
| பகுதி அளவு | : | 4 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 பகுதி | : | 42 கி. கலோரி |

# காளிஃப்ளவர் கோஃப்தா

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காளிஃப்ளவர் (2 நடுத்தர அளவு சிறிய துண்டுகளாக்கி நறுக்கி வேகவைத்து) | – | 500 கி. | கரம் மசாலா | – | ஒரு சிட்டிகை |
| | – | 50 கி. | உப்பு | – | தேவையான அளவு |
| பச்சை மிளகாய் (விழுதாக அரைத்தது) | – | 2 | வறுப்பதற்கு | | |
| | | | எண்ணெய் | – | 1 மே. க |

**கிரேவிக்கு :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தக்காளி (மையமாக அரைக்கவும்) | – | ¼ கிலோ | கரம் மசாலா | – | 2 மே. க |
| | | | மிளகாய்ப் பொடி | – | 1 டீஸ்பூன் |
| வெங்காயம் | – | 4 நடுத்தர அளவு (விழுதாக அரைக்கவும்) | இஞ்சி, பூண்டு விழுது | – | 2 மே. க |
| | | | உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

காளிஃபளவரை வேகவைத்து பிறகு மசிக்கவும். பச்சைமிளகாய், கடலை மாவு எல்லா வற்றையும் சேர்த்து சப்பாத்தி மாவு பதத்திற்கு உருட்டிக் கொள்ளவும். இக்கலவையை சிறியதாக எடுத்து கொண்டு அதற்குள் நடுவில் பட்டானியை வைத்து கட்லட் வடிவத்திற்கு செய்து சிறிது எண்ணெய் விட்டு வறுக்கவும். வாணலியில் 3 மேசைக்கரண்டி எண்ணெய்விட்டு இஞ்சி பூண்டு விழுது, தனியாபொடி, வெங்காய விழுது எல்லாவற்றையும் சேர்த்து பொன்நிறமாக வறுக்கவும். தக்காளி விழுதைச் சேர்த்து கொதிக்கவிடவும். கரம் மசாலா, மிளகாய் பொடி, உப்பும் இத்துடன் சேர்த்து 5 நிமிடத்திற்கு கொதிக்கவிடவும். கிரேவியில் கோஃபதாக்களை சேர்த்துப் பரிமாறவும். கொத்தமல்லி வைத்து அலங்கரிக்கவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 726 கி. கலோரி |
| மாவு சத்து | : | 95.6 கி. |
| புரதம் | : | 23.9 கி. |
| கொழுப்பு | : | 52.9 கி. |
| நார் சத்து | : | 10.3 கி. |
| பகுதி அளவு | : | 4 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி : 181 கி. கலோரி

# பீன்ஸ் பருப்பு உசிலி

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பீன்ஸ் | – | 100 கி. | பெருங்காயம் | – | ஒரு சிட்டிகை |
| கடலைமாவு | – | 50 கி. | எண்ணெய் | – | 1 தே. க |
| காய்ந்த மிளகாய் | – | 2–3 | உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

கடலைப்பருப்பை அரைமணி நேரம் தண்ணீரில் ஊறவைக்க வேண்டும். அத்துடன் காயந்த மிளகாய், பெருங்காயம், போட்டு மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும். அரைத்த கடலைப் பருப்பை, எண்ணெய் தடவிய குக்கர் தட்டில் 5 நிமிடம் வேக வைக்கவும். பீன்ஸை சிறிதாக நறுக்கிக் கொள்ளவும். பின் அதனை தண்ணீரில் சிறிது உப்புடன் வேக வைக்கவும். வாணலியில் எண்ணெய் விட்டு பீன்ஸ் மற்றும் அரைத்த கடலைப்பருப்பை போடவும். பிறகு தேவையான அளவு உப்பு சேர்த்து 2 நிமிடம் வெந்த பிறகு அடுப்பிலிருந்து இறக்கிவிடவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 434 கி. கலோரி |
| மாவு சத்து | : | 59.7 கி. |
| புரதம் | : | 17.8 கி. |
| கொழுப்பு | : | 13.8 கி. |
| நார் சத்து | : | 2.5 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 217 கி. கலோரி |

# லெட்டியுஸ் ரோல்ஸ்

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| துளிர் நொச்சி இலைகள் (நடுநரம்பு நீக்கியது) | – | 100 கி. |
| து. பருப்பு | – | 50 கி. |
| மிளகாய் வற்றல் | – | 6–8 |
| பெருங்காயம் | – | ஒரு துண்டு |
| மஞ்சள்தூள் | – | ¼ தே. க |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை

துவரம் பருப்பை அரைமணி நேரத்திற்கு ஊறவைக்கவும். பிறகு மிளகாய், மஞ்சள் பொடி, பெருங்காயம், மற்றும் உப்பு சேர்த்து அரைக்கவும். ஒரு மேசைக்கரண்டி அளவு இக்கலவையை எடுத்து சமமாக இலையின் மேல் பரப்பவும். இதன் மேல் மற்றொரு இலையை வைத்து அரைத்த விழுதை பரப்பவும். 4,5 இலைக்கு இதே போல் சுருள் மாதிரி உருட்டவும். இச்சுருளை இட்லி குக்கரில் 10 நிமிடத்திற்கு ஆவியில் வேகவைக்கவும். பிறகு வில்லையாக நறுக்கி சூடாக சாதத்துடன் அல்லது சப்பாத்தியுடன் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 159 கி. கலோரி |
| மாவு சத்து | : | 43.6 கி. |
| புரதம் | : | 15.6 கி. |
| கொழுப்பு | : | 1.4 கி. |
| நார் சத்து | : | 2.9 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 ரோல் : 79 கி. கலோரி

# ஸ்டஃப்ட்டு தக்காளி

## தேவையான பொருட்கள்

| | | | |
|---|---|---|---|
| தக்காளி | – 2 | தனியா | – 2 தே. க |
| பட்டானி | – 30 கி. | கொத்தமல்லி | – ¼ கட்டு |
| வெங்காயம் | – 30 கி. | வெங்காயம் | – 2 தே. க |
| முட்டைகோஸ் (துருவியது) | – 25 கி. | மஞ்சள் பொடி | – ½ தே. க |

## செய்முறை :

தக்காளியின் மேல்பக்கத்தை சீவி விட்டு நடுவில் இருக்கும் சாற்றை எடுக்கவும். காய்கறிகளை நறுக்கி, நன்றாக வேகவைத்துப் பிறகு மசிக்கவும். வாணலியில் எண்ணெய்விட்டு சூடானதும் சிறிய துண்டுகளாக நறுக்கிய வெங்காயத்தை சேர்த்து பொன்நிறமாக வறுக்கவும். இத்துடன் தக்காளி சாற்றை வேகவைத்த காய்கறிகள் எல்லாவற்றையும் சேர்த்துத் தண்ணீர் வற்றும் வரையில் வதக்கவும். பிறகு கொத்தமல்லி சேர்க்கவும். தக்காளிக்குள் இக்கலவையை வைத்து நிரப்பவும். ஒரு பெரிய வாணலியில் எண்ணெய் விட்டு சூடானதும் தக்காளியை வைத்து மூடிவிட்டு 10 நிமிடத்திற்கு சிறிய தீயில் வைக்கவும். தக்காளி மிருதுவாக ஆனதும் கொத்தமல்லியை மேலாக தூவி அலங்கரித்து பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 78 கி. கலோரி |
| மாவு சத்து | : | 8.8 கி. |
| புரதம் | : | 2.9 கி. |
| கொழுப்பு | : | 2.5 கி. |
| நார் சத்து | : | 6.7 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 ஸ்டஃப்ட்டு தக்காளி : 39 கி.கலோரி

# முளை கட்டிய கொள்ளு பச்சை பயறு தோசை

## தேவையான பொருட்கள் :

| | | |
|---|---|---|
| கொள்ளு | – | 30 கி. |
| பச்சை பயிறு | – | 25 கி. |
| பச்சை மிளகாய் (சிறதளவு) | – | 3 |
| இஞ்சி | – | ஒரு சிறிய துண்டு |
| சீரகம் | – | ¼ தே. க |
| வெங்காயத்தாள் | – | 25 கி. |
| வெந்தயக் கீரை | – | 25 கி. |
| கொத்தமல்லி | – | சிறியகொத்து |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

கொள்ளும் பச்சை பயறும் ஓர் இரவு முழுவதும் தண்ணீரில் ஊறவைக்கவும். மெல்லிய துணியில் கட்டி வைத்து முளைக்க விடவும். வெந்தயக் கீரையும், வெங்காயத்தாளும் சுத்தம் செய்து பொடியாக நறுக்கவும். வாணலியில் எண்ணெய்யில்லாமல் சீரகத்தை வறுக்கவும். வறுத்த சீரகம், இஞ்சி பச்சைமிளகாய், கொள்ளு, பச்சைபயறு எல்லாவற்றையும் சேர்த்து அதனுடன் சிறிது தண்ணீர் சேர்த்து அரைக்கவும், கொத்தமல்லி, நறுக்கிய வெங்காயம், வெந்தயக்கீரையையும் அரைத்த மாவுடன் சேர்க்கவும். தோசைக்கல்லில் இக்கலவையை தோசையாக செய்து சூடாக புதினா சட்னியுடன் பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 202 கி. கலோரி |
| மாவு சத்து | : | 35.1 கி. |
| புரதம் | : | 0.8 கி. |
| கொழுப்பு | : | 13.9 கி. |
| நார் சத்து | : | 3.3 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 தோசை | : | 101 கி. கலோரி |
| 1 தோசையின் வட்டம் | : | 6 அங்குலம் |

# சைவ ஆம்லட்

## தேவையான பொருட்கள்

| | | | |
|---|---|---|---|
| கடலை மாவு | – 60 கி. | தக்காளி | – 1 |
| வெங்காயம் | – 1 | வெந்தயம் | – 2 ½ தே. க |
| பச்சை மிளகாய் | – 5 | எண்ணெய் | – 2 தே. க |
| கடுகு | – ¼ தே. க | உப்பு | – தேவையான அளவு |
| இஞ்சி | – ஒரு துண்டு | | |

## செய்முறை :

வெந்தயத்தை ஒரு இரவு முழுவதும் ஊறவைத்து, வடிகட்டி, காயவைத்துப் பிறகு பொடியாக்கவும். தக்காளி, வெங்காயம் பச்சை மிளகாய், இஞ்சி எல்லாவற்றையும் சிறய துண்டுகளாக நறுக்கி, மற்ற பொருட்களுடன் சேர்த்துத் தண்ணீருடன் தோசைமாவாக கலக்கவும். சூடான எண்ணெய் தடவிய தோசைக்கல்லில் ஒரு கரண்டி மாவை தோசையாக ஊற்றி இருபக்கமும் ½ தேக்கரண்டி எண்ணெய் விட்டு சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 385 கி. கலோரி |
| மாவு சத்து | : | 46.9 கி. |
| புரதம் | : | 17.3 கி. |
| கொழுப்பு | : | 14.7 கி. |
| நார் சத்து | : | 2.7 கி. |
| பகுதி அளவு | : | 3 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 காய்கறி ஆம்லட் | : | 128 கி. கலோரி |
| 1 காய்கறி ஆம்லட்டின் விட்டம் | : | 5 அங்குலம் |

# முட்டைகோஸ் பக்கோராஸ்

## தேவையான பொருட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முட்டைகோஸ் | – | 100 கி. | பூண்டு (அரைத்தது) | – | 1 தே. க |
| கடலை மாவு | – | 30 கி. | சீரகப் பொடி | – | 1 தே. க |
| எண்ணெய் | – | 5 கி. | மிளகாய் பொடி | – | 1 தே. க |
| பச்சை மிளகாய் | – | 2 | உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

முட்டைகோஸை நன்றாக துருவிக் கொள்ளவும். முட்டைகோஸ், மிளகாய் பொடி, பூண்டு, சீரகம் பொடி, உப்பு அனைத்தும் கடலைமாவில் போட்டு பிசைந்து கொள்ளவும். எண்ணெய் தடவிய தட்டில் இதனை போட்டு 15 நிமிடம் குக்கரில் வேக வைக்கவும். உங்களுக்கு வேண்டிய வடிவத்தில் நறுக்கி வறுத்துக் கொள்ளவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 184 கி.கலோரி |
| மாவு சத்து | : | 22.5 கி. |
| புரதம் | : | 8.0 கி. |
| கொழுப்பு | : | 6.8 கி. |
| நார் சத்து | : | 1.4 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி முட்டைகோஸ்
பக்கோராஸ் : 92 கி. கலோரி

# பெசரட்டு

## தேவையான பொருட்கள்

| | | |
|---|---|---|
| பயத்தம் பருப்பு | – | 60 கி. |
| வெங்காயம் | – | 1 |
| இஞ்சி | – | ஒரு துண்டு |
| பச்சைமிளகாய் | – | 2 |
| எண்ணெய் | – | 10 கி. |
| உப்பு | – | தேவையான அளவு |

## செய்முறை :

பயத்தம் பருப்பை ஒரு மணி நேரத்திற்கு ஊறவைக்கவும். இத்துடன் இஞ்சி, பச்சை மிளகாய் உப்பும் சேர்த்து அரைக்கவும். வெங்காயத்தை சிறு துண்டுகளாக நறுக்கி அரைத்த மாவுடன் சேர்க்கவும். வாணலியை சூடாக்கி எண்ணெய் தடவவும். ஒரு கரண்டி மாவை சமமாக பரப்பி ஒரு டீஸ்பூன் எண்ணெய் விட்டு இருபுறமும் வறுக்கவும். தக்காளி (அ) கொத்துமல்லி சட்னியுடன் சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 323 கி. கலோரி |
| மாவு சத்து | : | 41.5 கி. |
| புரதம் | : | 15.3 கி. |
| கொழுப்பு | : | 10.8 கி. |
| நார் சத்து | : | 0.8 கி. |
| பகுதி அளவு | : | 3 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| 1 பெசரட்டு | : | 108 கி. கலோரி |
| 1 பெசரட்டின் விட்டம் | : | 6 அங்குலம் |

# கொள்ளு புட்டு

## தேவையான பொருட்கள் :

| | | |
|---|---|---|
| கொள்ளு | – | 100 கி. |
| வெங்காயம் | – | 1 |
| பச்சைமிளகாய் | – | 2 |
| கொத்தமல்லி | | |

## செய்முறை :

கொள்ளை முந்திய நாள் இரவே ஊறவைக்க வேண்டும். பிறகு கொள்ளை அரைத்துக் கொள்ள வேண்டும். இதை புட்டு போல் வேகவைக்க வேண்டும். எண்ணெய்யை சூடு செய்து அதில் வெங்காயம், பச்சை மிளகாய் மற்றும் கொள்ளு (வேகவைத்தது) இவற்றை கலந்து நன்கு வேகவைக்கவும். சூடாக பரிமாறவும்.

## சத்தின் மதிப்பீடு :

| | | |
|---|---|---|
| எரிபொருள் | : | 391 கி. கலோரி |
| மாவு சத்து | : | 62.7 கி. |
| புரதம் | : | 22.6 கி. |
| கொழுப்பு | : | 0.6 கி. |
| நார் சத்து | : | 5.6 கி. |
| பகுதி அளவு | : | 2 பகுதி |

## கலோரியின் மதிப்பீடு :

1 பகுதி கொள்ளு புட்டு : 196 கி. கலோரி

